உ







தத் சத்

பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

முத்திராமலிங்க ஞானதேசிகராதீனத்து

# ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் அவர்களால்

ஸ்தாபிக்கப்பெற்றிருக்கும்

# பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபையின் சதுர்த்த சகாப்த ப்ரதீபநம்.

இது

ஷை சபையின் காரியதரிசி

கண்டனூர்

நா. பெ. நா. முத்துராமப்யா அவர்களால்

காரைக்குடி

ஞானம்பிகா ப்ரின்டிங் வோர்க்ஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

பிங்கள-ளூ ஆவணி-மீ

24-2

ஓம்:

பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்.

முத்திராமலிங்க ஞானதேசிகர் ஆதீனத்தில்

ஸ்தாபிக்கப்பெற்றிருக்கும்

# பிரஹ்மவித்தியாப் பிரசாரண சபையின்

## தாத்பர்யம்.

மூன்றுமின் ஞான்றோ விருமையிற் பூன்ற முதல்வனே யனுபவப் படுவன்
தோன்று சமாதி துயிலுறு மூர்ச்சை தோன்றுறு முன்னமு நிறைவே
மூன்றுறு வேறுங் கிஞ்சிலிற் சுகமின் முகிணிறை வெஃததது சுகமாம்
ஈன்றுறு துயர்கூர் நாரதற் கிவண மியம்பினன் சநற்குமா ரனரோ.

வேதமைந் தரிய புராணம தோடு விவிதநூற் றெளிந்துந் தற் றெளியாத்
தீதிறு லதிக வாதைநா ரதனுஞ் செறிந்தனன் வேதமோ திடுமுன்
ஓதுமுத் தாப மாத்திரை யானே யுறுமஞர் பின்னரப் யாசம்
ஓதிய மறந்த விகழ்வொடு கருவ முறுதலான் மிகுதுய ராமே.

அவ்வியா னறிஞ! வலமரு கின்றே னஞர்க்கரை யென்னையீண் டடைவி
செவ்விதி னெனக்கேட் டடமுநி சுகமே செறியிதன் கரையெனத் தெரித்
கவ்வுவை ஷயிக சுகமிடர் கோடி கலத்தலிற் றுன்பமே யென்று [தான்
இவ்விறை மதித்துக் கிஞ்சிலிற் சுகமின் றென்றுவாய் மலர்ந்தரு ளினனே.

அறிவின்மிக்க அன்பர்காள்!

இச்சம்சார தாபத்தினின்றும் நீங்குவதற்குபாயம் பிரஹ்ம வித்தை யொன்றேயாம். அறுபத்து நான்கு கலைஞானங்களையு முடைய நாரதபகவான் துக்கம் நீங்காதவராய் ஸநத்குமார முனிவரை யடைந்து, பிரஹ்ம வித்தையைச் சிரவணித்துத் துக்கத்தை நீக்கினரெனச் சுருதிகளாற் கேட்டே மாகலின், வித்தையாவற்றுள்ளும் பிரஹ்ம வித்தையே உத்கிருஷ்டமென நிச்சயமாகின்றது. அங்ஙனமே வேதசாஸ்திர பிரஸ்தானத்திரயாதிகளின் சம்மதமுமாம். இப்பிரஹ்ம வித்தையைக் கலிப்பிரபாவத்

தால் உலகத்திலுள்ளவர்க ளறியாதவர்களாயும், பெரும்பாலும் அதற்குச் சாதனமான சாஸ்திராப்பியாச மில்லாதவர்களாயும் ஜீவனோபாயங்களிலேயே காலத்தைக் கழித்து இச்சன்மத்தைப் பிறவா நாளாக்குகின்றனர். அவர்கள் உஜ்ஜீவித்தற் பொருட்டு பிரஹ்மவித்தியாப் பிரசாரணமென்று ஒரு சபை ஸ்தாபிக்க வேண்டுமென்று தற்காலம் ௸ யூரில் மடாதிபதியாயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளவர்கள் கருத்திற்றோன்றி கண்டனூர் நா. பெ. நா. முத்துராமய்யா அவர்கள் நன்முயற்சியால், கோவிலூர் மடாலயத்தை ஸ்தாபித்த ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளவர்களின் பிரபாவம் விளங்குவதற்கு பிரமாதீச ௵ பங்குனி ௴ ௸ குருபூஜை தினமாகிய உத்திர நக்ஷத்திரத்தன்று இம்மகாசபை மிக்கவிமரிசையாக ஸ்தாபிக்கப்பெற்று யாவருக்கும் பயன்படுமாறு பிரஹ்மவித்தியாப் பிரசங்காமிர்தமாரி பொழிந்து இனிது நிலவுகின்றது. இச்சபையின் நான்காம்வருடபூர்த்திக் கொண்டாட்டம் பிங்கள ௵ ஆனி ௴ 31௳ முதல் ஆடி ௴ 9௳ வரையில் காலை மாலையாகிய இருவேளைகளிலும், அறிவின்மிக்க அநேக சாதுக்களாலும், சாஸ்திரிகளாலும் பற்பல அரிய பெரிய பிரஹ்மவித்தியா சம்பந்தமான விஷயங்கள் மந்தர்கட்கும் புத்தியிற் புலப்படுமாறு உபந்யசிக்கப் பெற்றன. பக்தகோடிகளனைவரும் வந்திருந்து சிரவணித்துப் பெரும்பேறான பிரஹ்மானந்தம் அடைந்தார்கள். உபந்யாசகர்களுக்குத்தகுந்த பீதாம்பரம் திரவியமுதலிய சன்மானங்களும், மற்றையோர்கட்கு அவரவர்கட்குத் தகுந்தவுபசாரணைகளும் நடத்தப்பெற்றன.

இன்னும், இச்சபையினாதரவினாலே ஸ்ரீமத் சுப்பய்ய சுவாமிகளவர்களால் "உபதேச சகஸ்திரீ" என்ற அரிய நூல் தமிழின் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்துலவுகின்றது. 'நியாயமுக்தாவலி' என்ற கிரந்தம் மேற்படி சுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்டு அச்சாகிவருகின்றது. சீக்கிரத்தில் வெளிவரும். ஜகத்குருவாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் பிரபாவத்தை யாவரும் எளிதிலுணர்ந்து பயனடையுமாறு, அப்புண்ணிய மூர்த்தியின் திவ்யசரித்திரத்தைத் தெள்ளிய செந்தமிழ் நடையில் எழுதிக் கிரயமின்றிப்ப்பிரசுரிக்கும் வண்ணம் காரைக்குடி கம்பராமாயண ப்ரசாரகர் ஸ்ரீ கோவிந்தராஜய்யங்காரவர்களைக் கொண்டு அதற்குத்தக்க ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கின்றது.

# சபை நிகழ்ச்சி விபரம்.

காரியதரிசியின் முகவுரை.

| | | |
|---|---|---|
| கோவிலூர் | ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | ... சபையின் நோக்கம் |
| ,, | ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் | ... சாதுசங்க மஹிமை |
| ,, | ஸ்ரீ காசிகாந்த சுவாமிகள் | ... சங்கரர் விஜயம் |
| ,, | ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் | ... புருஷார்த்தம் |
| ,, | ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | ... ஜீவன்முத்தி லக்ஷணம் |
| கண்டனூர் | ஸ்ரீ சுப்பிரமணியசாஸ்திரிகள் | ... வருணாச்சிரம தருமம் |
| குன்றக்குடி | ஸ்ரீ சதாசிவக் குருக்கள் | ... பக்தி |
| கோவிலூர் | ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் | வேதாந்திகளே உயர்ந்தவுபாசகர் |
| நீடாமங்கலம் | ஸ்ரீ சுப்பிரமணியசாஸ்திரிகள் | ... சதுர்வேத தாத்பரியம் |
| சாக்கை | ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் | ... பக்தி |
| சென்னை | ஸ்ரீ அருணாசல சாஸ்திரிகள் | ... பஞ்சகோச விசாரம் |
| குன்றக்குடி | ஸ்ரீ விஸ்வநாத சாஸ்திரிகள் | ... திரிபுடி சொருபம் |
| மதுரை | ஸ்ரீ கல்யாணசுந்தரபட்டர் | ... ஆகமமுடிவு |
| காரைக்குடி | ஸ்ரீ கோவிந்தராஜய்யங்கார் | ... ஸ்ரீ இராமபிரான் மகிமை |
| வலயபட்டி | ஸ்ரீ இராமஸ்வாமி ஐயங்கார் | ஸ்ரீ மாணிக்கவாசகர் சரித்திரம் |
| கண்டனூர் | ஸ்ரீ முத்துராமய்யா | ... தெய்வோபாசனை |
| கோவிலூர் | ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | ... ஈஸ்வர சங்கரப்ரபாவம் |

காரைக்குடி சதாவதானம்

பிரம்ம-ஸ்ரீ பாலசுப்பிரமண்ய ஐயரவர்களியற்றியவை.

ஒவ்வொருநா ளுத்சவத்தி லோரொருமான் களும்பெரிய வுபந்யாசம்
அவ்வவர்க ணெடுநாளா யப்பியசித் ததைப்பொழிந்தா ரவையெ வர்க்கும்
திவ்வியதே வாமிருத மாகிவரும் பிறப்பிறப்பைத் தீர்த்ததாலே
யிவ்வுலகிற் றிருக்கோவி லூரொன்றே மோட்சமளித் திடும்பே ரூரே.

வெண்பா.

கோவிலூ ரேகயிலைக் குன்ற மதிலமர்கோ
தேவதே வன்றிகழ்மெய்ச் சீடரெல்லா—மாவிற்
பனஜனக ஞாதியர்கள் பன்னியசொல் லெல்லாந்
தனைநிகர்க்கும் வேதாந்த மே.

வேம்பத்தூர் பிரம்மஸ்ரீ

சி. பி. மஹாதேவ பாரதியவர்களியற்றியவை.

வித்வ சனப்பிரியன் வேண்டு மனக்குடையோன்
பக்தர்தமைப் பாலிக்கும் பண்புடையா—னித்தியமும்
போதமா முன்மைப் பொருளுபதே சிக்கவல்ல
மேதகையன் ஞபலைச்சாமி

பாபம்போந் தாபம்போம் பன்னுன் முனிவிட்ட
சாபம்போந் தர்மந் தழைக்குமே—பாபுவியி
லார்த்தியறச் செம்பொன்ரு ளண்ணு மலைஞானக்
கீர்த்திபனைக் காணநினைக் கின்.

விற்பனர்மே வும்பிரம வித்பாப்ர சாரனை
நற்சபையிவ் வாறுய் நடைபெறவே—யற்புநிறை
வாலறிவ னண்ணு மலைஞான தேசிகனைக்
காலமுமே பார்தனில்வாழ்க.

ஓது நால் யாவு முணர்ந்துபரி பாகமுற்ற
சாதுபுகழ் சுப்பய்ய சாமிதனைப்—பூதலத்திற்
றாயவுபந் யாஸந் துணிந்துசெய வேபடைத்தான்
மாய னுத வுங்கமல மன்.

—ooo—

வேம்பத்தூர்

பிரம்ம-ஸ்ரீ கோவிந்த பாரதியவர்க ளியற்றியவை.

மாமேவு வேதமஹா வாக்கியார்த் தப்பொருளே
தூமேவு மான்ம சொரூபமென்று—நாமேவும்
இன்பவறி வென்று மெடுத்துரைத்த வாண்டவராம்
அன்பர் திருவருளி னால்.

செந்தமி ழாரிய பாடையி னுன்மறை தேர்ந்தவையி
னந்த முணர்ந்து துறவெய்தி மெய்யறி வார்ந்து நறுஞ்
சந்தமலர்ப் பொழில்சூழ் கோயிலூரிற் கதிர்மணியின்
சந்த மடாதி பதியாகி யின்பந் தழைத்திடவே.

நண்ணிய வண்ணு மலைஞான தேசிக ஞறிதழிக்
கண்ணிய ளாநெல்லை யம்மை மகோற்சவக் காட்சியுட
ஞுண்ணிய ப்ரமவித் யாப்பிர சாரண நோன்சபையில்
எண்ணிய லாவுபந் யாசம்வைத் தியாவரு மின்புறவே.

வந்திடுங் கற்பக வாணரி னுள்ள மகிழ்வடையத்
தந்திடுங் கற்பக தாருவைப் போனிதி சால்வைதந்தான்
இந்திடுஞ் சென்னியள் சாலிவா டீஸ்வரி யின்னருளான்
முந்திடுங் கீர்த்தியின் மிக்கிவன் வாழ்க முயலுவனே.

—oo:xx:oo—

வலயபட்டி வி. வித்தியாசாலைத் தமிழாசிரியர்
நேடுவை-திரு-இராமசாமி ஐயங்காரவர்களியற்றியவை.

உண்மையாம் வேத முறைசெயத் துவைதத்
தொளிர் நிலை யுயர்தர வுணர்த்தும்
கண்மையா ரன்பர் கணநிறை கோயிற்
கவின்றலத் துமாபதி கருணைத்
தண்மையா லன்னோ ரந்நிலை நிற்கத்
தருமவை நிறீஇப்பயன் றந்தார்
திண்மையா ரறன்முன் னுதிய பொருள்கள்
செழித்தொளி சிறந்திட மன்னோ.

இன்னநல் லவைக்கீண் டிசையிறை யாரென்
றியம்பிடு னெழிற்சமமாதி
மன்னிய குணமா மலையெனு மண்ணு
மலைநிறை ஞானமா குருவாந்
தன்னொடு மினிய காசிகா நந்த
சாமிநற் சுப்பைய சாமி
என்னுமொண் டுணையான் முத்துராமப்பே
ரினனொடு விளக்கினன் வாழி!

—∽∽—

காரியதரிசி. முத்துராமய்யா அவர்களியற்றியது.

அப்பணி சடையா னருளினைக் கொண்டு
இப்புவி தன்னில் யாவரு முணரச்
சுப்பைய சுவாமிகள் சொலுமுபந் நியாசந்
திப்பிய சேடனுஞ் செப்புதற் கெளிதே.

காரைக்குடி கம்பராமாயண ப்ரசாரகர்

பிரம்மஸ்ரீ மோ. வே. கோவிந்த ராஜய்யங்கா ரவர்களியற்றிய

## வேதாந்த வித்யார்த்தி யாற்றுப்படை.

—oo:✱:oo—

வாரீ ரன்பீர்! வாரீர் நண்பீர்!!
வாரீர் நும்மன மயக்கற் றிடுமினோ
திருந்திய செல்வம் பொருந்தினி ராயினும்
வருந்திவந் தடைந்தனிர் வகையி தென்னோ?
மித்திர ரேவலர் மேதகு பல்வளன்
புத்திரர் முதலிய புவிக்குரித் தாயின
வெல்லாம் பெற்று மொல்லாத் திறத்துப்
பொல்லாங்குற்ற பொய்ம்மக னென்னத்
திருத்தி கொள்ளாது திகைத்திவ ணுற்றீர்
அருத்தியென் னுண்டோ? அறைந்திடு மிங்வன்
நும்மனக்கோளை நோக்கின் னடையின்
இம்மென் றறிந்தன னியம்புதுங் கேண்மோ
மனமமை யாது மயங்கினி ரந்தோ!
மனையின் வாழ்வை மதித்துளீ ரேனும்
அனைத்து ணின்றே யனைத்து மொழித்தே
தனையுள் ளோர்ந்து தாமரை நீராய்
நினைத்தில் விருப்பின் நித்திய திருத்தராய்
அந்தமி லின்பத் தழிவில் வீட்டைச்
சந்ததம் பெற்றுச் சலிப்பற் றிருப்பீர்
மனநோய் நீங்கு மினமே தென்னின்
சினத்தைச் சினந்த சீரியர்ச் சென்று
கனத்தை மறந்து தனத்தை வெறுத்து
இனத்திற் கேங்கா திருப்பீ ராயின்
நான்மறைப் பொருளைத் தேன்மழை யாங்குப்
பானிலைத் தூட்டுந் தாயினிற் றந்து
நும்மன மயக்கை யிம்மெனப் போக்கித்
தம்மை யுணர்ந்த தன்மைய ராலவர்
செம்மை காட்டிச் செருக்கை யோட்டிச்
சும்மை வீட்டிச் சுகமளித் திடுவர்

அன்னோ ரவைக்கள மியாதென் றுரைப்பல்
சின்னீர வின்பச் செடியுடற் பற்றை
யில்லையென் றுகவே யீர்ந்திடு மிறைவி
நெல்லை நாயகிதான் நேர்ந்தருள் புரியும்
அழியா நலனுடைக் கழணியந் நாட்டின்
மொழிநிறை யோர்கள் முற்படு நன்மைக்
கோயிலூ ரெனுநல் வாயிலாங் கதியைச்
சேயிலாச் செய்து செம்மை தரும்பதி
யதனுள் ளகநிறை யத்து விதத்துப்
பதனுறு பண்பிற் பக்குவ மறிந்து
சீவர்கள் நற்பயன் றேறிடு மாறும்
தேவர்க ளாகித் திகழ்ந்திடு மாறும்
பிரம வித்யாப் பிரசா ரணமெனும்
புரம சபையைப் பண்புற நிறீஇனர்
அவ்வவை நாடி யகநனி வணக்கிச்
செவ்வையிற் கேட்பின் செம்மையுள் ளத்தோ
ரந்த ணாளர்க ளறிபுல வோர்கள்
பந்தநால் வேதப் பதப்பொரு ளுணர்வோர்
தம்மை யறிந்தோர் மும்மை யிகந்தோர்
நம்மைப் புரப்பா னல்கிடும் பிரஸங்
கம்மெனும் மாரி காரினிற் றருவர்
பொய்ம்மனக் களைகட் டுய்வய னிறைப்பர்
ஆதலி னுங்கே யணைமினோ நுங்கட்
டாகந் தவிர்த்துக் கருப்பிணி தணிமினோ
இன்னபே ரவைதனை யெழில்பெற நிறுவின
ரின்னவ ரென்னுமக் கிசைத்திடு வேனன்
மாதன வசியர் மரபினில் வந்து
சாதன நான்கு மேதக வடைந்து
மண்ணுதி மூன்றும் மயக்கற நீத்த
அண்ணா மலையெனும் அருளுறு தேசிகர்
பேசருஞ் சாத்திரப் பெருமழை பொழியுங்
காசிகா நந்தக் கார்முகிற் சாமி
எம்மதக் கோருஞ் சம்மத மெனவே
நம்மனக் குகையில் நலம்பெறப் பெய்யு

மோதருங் கல்வி யுத்தம குணமுடன்
சோதரத் தன்புடைச் சுப்பைய சாமி
வித்துவன் மணியராம் வேதியப் பெரியரைப்
பத்தியிற் கேட்கும் பக்குவத் தினர்தமை
நத்திய வன்புடன் நாடிமுன் நயந்திடும்
முத்து ராமையனென் முதறி வள்ளல்
என்னுமிம் மேலவ ரெழிலுறக் கூட்டினர்
மன்னுமிந் நிலமிசை மணம்பெற வென்றும்
வாழியிச் சபையும் வாழிபே ரறிஞர்
வாழியி தமைத்த வாழ்வுறு நால்வர்
நெல்லை யம்மைதம் நீளருளு வாழி!
பல்வளம் பெருகிடப் பார்த்திவர் வாழி!
மணம்பெறு வணிகர் கணத்தொடு வாழி!
குணம்பெற் றெவருங் குலவி வாழியவே!

—o◦◦—

திருவாரூர் தமிழாசிரியர்
ஸ்ரீ C. துரைசாமி தேசிகரவர்களியற்றிய
பிரசங்க நிகழ்ச்சிப்பாக்களும் வாழ்த்துப்பாவும்.

—o◦◦—

உலகுகலி மடநீங்கி யுய்யுநெறி யுளமுன்னி யுயர்தமிழ்ச் சங்கமேவும்
நலகுமரி வளநாட்டி னொளிர்கோயி லூரதனி னண்ணுதிரு நெல்லையம்மன்
இலகுமன மகிழ்கொற்ற வாளீசர் திருவருளி னிசைமுத்தி ராமலிங்க
வலகில்கலை யருண்ஞான தேசிகர்தபோதனர்க ளமர்மடம தொன்றுநன்றே

மன்னநிரு மித்தங்கு வந்துபணி மாணவர்கள் வாழ்வுறப் பிரமவித்தை
தன்னையுப தேசித்த தன்மைபோலிந்நாட் டகும்ப்ரமா தீசவருஷந்
துன்னுபங் குனிமதித் தாயவுத் திரமதிற் றுலங்குநற் பிரமவித்யா
வென்னுமுயர்ஞானப்ரசாரணஞ்செய்சபையையின்னுயிர்கள்வாழவெண்ணி

ஒருமையொடு கண்டனூர் முத்துராமப்பெரிய ரொருவர்த .முயற்சியாலே
கருணைகொடு நிறுவியே காட்சியளவையினுணர் கலைஞான முதவுகுருதான்
பெருமைபெறு பாவலர்கள்காவலர்கடன்வசியர்பேரின்பமது வேண்டுவோர்.
அருமையுற விணையவம ரண்ணமலைஞான வரியதே சிகசாமியே.

அப்பிரம சபையினன் காமாண்டு நிறைவிழா வாரம்ப சுதினமான
தப்பில்பிங் களமிதுன மதிமுப்ப தொன்றிலே சார்ந்ததிர வாரமதனில்

ஒப்பில்பிர மாநந்த மூர்த்தியண்ணாமலை யுயர்ஞான குருசாமிகள்
செப்பமுள புனிதவக் கிரபீட மமர்தர சிறந்துசபை சோபித்ததே.

அவ்வினிய வவையினப் போதுநான் மறையோர்க ளாகமமுணர்ந்தபேர்கள்
செவ்வியவெ ணெண்கலைச் சாரமது கண்டுணர்வு சேர்ந்தநற் சீலவான்கள் [ர்
எவ்வெவர்களும்பணியவருமான்மஞானமொளிரெழிலகத்துறவுகொண்டோ
பவ்வநிகர்பொருள்கொண்டபெருவணிகராதிபலர்பக்தியொடுவந்தனர்களே.

வந்தபெரி யோர்களைக் கழககா ரியதரிசி வரமுத்தி ராமவையன்
முந்தவரன் முறையாக வந்தனையொ டுபசார வளமதுரமொழுகுமொழியால்
சிந்தைகொள மொழியவே தாந்தபாஸ் கரரெனும் ஸ்ரீசுப்பையாசாமிகள்
இந்தெனவெழுந் துரைத் தருளினர் சபைநோக்க மிவர்பெருமையாரறிவரே!

மன்னுயி ரகத்திருளை மாற்றலான் மாகரவி மானுமோ? சற்றுமிவரை
பன்னுமெப்பொழுதினுமலர்ந்தவிவர் முகமதைப்பாரில்பங்கயமொக்குமோ?
நன்னரெங் நாட்டவரு நாடியடி யடைவதாஞனிலத் தரையர் நேரோ?
மின்னொளிச்சுடிகையுறுமாதிசேடனுமிவர்தமெய்யறிவின்முன்னிற்குமோ

இவ்வறிஞ ருக்குவமையிவரே யெனப்பல ரிசைத்தனர்கள் மேற்றினத்திற்
செவ்வைபெறு சிவராம லிங்கசாமிகள்மிகச் சீர்மைபெறு மக்களாவோ
ரெவ்வகையவின்னலுமெளிதில்பெறலாகுநெறியியைசாதுசங்கமெனவே
அவ்வையுரைகொண்டுபந்யாஸமதுசெய்ததனையமுதமெனவவைகொண்
[டதே.

அடுத்தநாள் ஸ்ரீகாசி காநந்த சாமிநமதாண்டவர தருளினல்வாய்
மடுத்தசாத் திரவறிவி னுற்றலா லுலகெங்கு மறைமுரணு மதமனைத்துந்
தொடுத்ததீ மாக்கடற் ருழவத் துவிதநெறி சுருதிமுறை பரவவெங்கும்
விடுத்தவுயர் சங்கர ஜகத்குருவின் விஜயம் விளக்கிஞ ரகமகிழ்ந்தே.

மற்றுமங் களவார மதனில் புருடார்த்த மாவதியாது வெனவெடுத்துச்[மேற்
சுற்றுகட லாடையுல கத்துளோர்கொளுமிச்சை சொர்னமண் பெண்களின்
சொற்றபய னிவையல்ல வென்று நேரிற்கண்டு சுடருமெய்ஞ் ஞானமதனால்
பற்றுக சிவோகபாவனைசுகம தென்றனர் பரஞ்சாது சங்கமென்றூர்.

உற்றபுத்வாரம்ஸ்ரீ வேதாந்த ரவியவையி லுதயமாய்ப் பிரமஞானம்
பெற்றகுரு தேடிபடி நத்தியுப தேசமொழி பேணியிப் பிறவிவாய்ந்த
சற்றுமவ மின்மெய்கொடு சார்துன்ப மிலராய்ச் சதாசிவா நந்தமூழ்கிக்
கொற்றவர்கள் குலவநிலவுதல்சீவன் முத்திநிலை கொளுமென்று கூறினரே.

கண்டனூர் வாழ்சுப்ர மண்யசாஸ் திரிகள்மேற் கழகமுற் கண்யமாக
மண்டலத் தவர்தழுவு நான்குவரு ஞச்சிரம மாதரும மனைவற்றையும்
கொண்டல்வளர் குன்றைவேளருளின் சதாசிவக் குருக்கள்மெய்ப் பக்திதனை
கொண்டவற் றின்றிறங் களையாரு முணரக் குழைந்தகங் கழறினரே. [யுங்
மறைவித்தை யின்மணங் கமழ்கோவி லூர்ச்சுப்ர மணியசாஸ் திரிகளாவோர்
குறைவற்ற வேதாந் தியேயுயர்தரமாய்க் கொளுமுபா சகராகுவார்

நிறைவுற்ற வுண்மையிஃதென்பதையு நன்செய்சூழ் நீடாமங்கலமென் னுமூ
ருறைசுப்ரமண்யசாஸ்திரிகள்மற்றதாற்பரியவுரையையுமெடுத்துரைத்தார்.
பத்திநெறி யைச்சாக்கை ஸ்ரீகிருஷ்ண சாஸ்திரிகள் பலதிறப்படநவின்றார்
முத்திதரு மைந்துகோ சவிசாரமென்பதை முறைமன்னர் வாழுமாடப்
பத்திபெறு சென்னையுறையருணாசலப்பெயர்கொள்பண்புறுஞ்சாஸ்திரியவர்
நத்திமுறை யாகவெல்லோ ரகத்தும்பதிய நயமுட னவின்றனரரோ. [கள்
கந்தனமர் குன்றக் குடிப்பதியில்வாசத்தர்கரையிலாக் கலையுணர்ந்தோர்
வித்தையறி ஸ்ரீவிஸ்வ நாதசாஸ்திரிகளவர் மேவுதிரி புடிசொரூபம்
மந்தமதி யோருமுண ரும்வகை யுரைத்தனர் மதுரையம் பதியில்வாழும்
அந்தமிகு கல்யாண சுந்தரரெனும்பட்ட ராகமாந் தம்புகன்றார்.
திருவளரு முயர்வணிக ரோங்கு காரைக்குடித் திரமதாய்த் தங்கியுள்ள
மருவளரு கோவிந்த ராஜவையங்காரு மன்னு ஸ்ரீராமர் மகிமை
யிருமிரச கம்பர்கவி யின்னுரையினூட்டின ரிசைமருவு மணிவாசகர்
பெருஞ்சரிதை யைராமசாமிவை ணவர்மிகப் பிரியமாய்ச் சொன்னாரரோ.
நிகழுமதி யாடியோ ரொன்பதாந் தேதியதி னிகரில்கா ரியதரிசிதான்
புகழுதெய் வோபாச னையென்ப தனிலுண்மை புந்தியிற் கொளவுரைத்தார்
சகதலமெலாம்பரவ ஸ்ரீசுப்பை யாசாமி சங்கரோ சர்ப்ரபாவம்
தகவுபெறு தகுதியந் தணர்கள்பர வசமுறத்தண்ணளியினன் குரைத்தார்.
அவ்வமய மரியபல கவிவாண ரழகாக வானந்த மேலீட்டினாற்
றவ்விமிகு வாழ்த்துகவி யாரமவை சூட்டவிச் சபையினது நான்காம்விழா
நவ்விதிரு நோக்கநெல்லம்மை திருவருளினா னன்கு நிறைவுற்றதம்மா!
இவ்வவையொ டண்ணாமலைஞான தேசிகரு மென்று நீடூழிவாழி!

## கண்டனூர் ஸ்ரீமுத்துராமய்யா அவர்கள் உபந்நியசித்த தெய்வோபாசனை.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணாடு.

திருவிளையாடற் புராணம்.

மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம்பின்சென்
றறைதரு மிருதி யெல்லா மவைக்கனு குணமா மின்ன
முறையினால் மார்த்த மென்று மொழிவதம் மார்த்தஞ் சேர்ந்த
துறைகள்வை திகமா மேலாச் சொல்வதிச் சுத்த மார்க்கம்.

தாயுமானவர்.

செப்பரிய சமயநெறி யெல்லாந் தன்றன்
றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான

வப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
லடுத்தநூல் களும்விரித்தே யநுமா னாதி
யொப்பவிரித் துரைப்பரிங்கன் பொய்மெய் யென்ன
வொன்றிலையெனா றெனப்பார்ப்ப சொல்வா தார்க்கு
மிப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
யாதுசம யம்வணங்கு மெல்லை யாகி;
இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்ப.மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங்காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராஜாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ.

அந்தோவீ திசயமிச்சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமாவாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்று
மிந்திராதி போகநலம் பெற்ற பேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
புன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன் றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
வெச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுளா வெனக்குந் தானே
கண்டவுட னானந்தங் காண்டலாகும்.

---

வைதிகமார்க்கரான வேதாந்திகள் விக்கிரக ஆராதனை செய்வதைப் பற்றி, அந்நிய மதத்தார்கள் கொண்டிருக்குந் தப்பபிப் பிராயத்தைத் திருத்து நோக்காய் "தெய்வோபாசனை" என்னும் விஷயத்தைச் சொல்லத்துணிந் தேன். அதைச் சபையோர்கள் குணமாக அங்கீகரிக்கவேண்டியதாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். வைதிகமதத்தின் கொள்கைகளையும், அதனது பெருமைகளையும், அறியாது அந்நியரது போலிவாதங்களாற் சிலர் மயங்கு கின்றனர். அந்த மயக்கம் நீங்கும்பொருட்டுத் தனவணிகர் செய்த தபோ

பலத்தால் நமது பரமாசாரியராகிய ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் காரைமாநகரில் ஜெனனமாகி, சிக்கல் ஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிகரிடம் ஞானனுக்கிரகம் பெற்று, கோவிலூரின் கண்ணே ஸ்ரீ திரு நெல்லை நாயகி சமேத கொற்றவாளீசர் அருளையுற்று, ஸ்ரீ ஆண்டவர் என் னுஞ் சிறப்பு நாமம் பூண்டு தாம் திருவாய்மலர்ந்தருளிய "சுவாநுபவத் திரு வாக்கு" என்னும் நூலில்

"தெய்வ வடிவறிந்தத் தேவதையைப் பூஜைபண்ணித்
தெய்வ வடிவாந் திறங்கேளீ—ஐயமினால்
சற்குருவாற் றானுணர்தல் சந்ததமுஞ் சிந்தித்தல்
நிற்குமது வான நிலே." எனவும்
"சுட்டுமிடத் துண்டெனலாய்ச் சுட்டற்று லில்லாத
துட்டமனச் சஞ்சலத்திற் றேயாம—எட்டரிதா
யெவ்வுருவு மெங்கு மிரும்பொருளாய் நின்றதெதோ
அவ்வறிவே தெய்வமென லாம்" எனவும் கூறியுள்ளார்.

ஷெ கவிகளின் சாரமாவன:—ஜீவகாருணியம், ஈஸ்வரபக்தி, பாசவை ராக்கியம், பிரமஞானம், ஆகிய நான்கு நிறைந்த ஆசாரியரை யடைந்து, வைதிகநூலுணர்ந்து, அறிவே தெய்வமெனத் தெரிந்து, அவ்வறிவாகாரமாய் விளங்குவதே மேலான பூஜையாகும்.

இன்னும் வாசிட்டத்தில் சிவபெருமான் வசிட்ட சுவாமிகளுக்கு "தீவினையெல்லா மறுத்து" என்னுஞ் செய்யுளாலும், "தேகமுதற் பிரிவு களாய்" எ-ம்; "செல்வழியோசனை" எ-ம்; "அறிவு சமபாவனை" எ-ம்.

"தெள்ளறி வெல்லாக் கலைக்குமெட்டா தெல்லாக் கருத்துஞ் சேர்ந்துண் முள்ளநில திரண்டினடு சத்தாசா மானியமே யுருவாய் நிற்கு [ணிற்கு
தள்ளரிய பெருஞ்சத்தா மாத்திரமெய் யாந்தெய்வந் தானு மீதே
யெள்ளரிய விகல்பகற்ப வடிவாகி யுணர்வுருவை யிழந்து வேறும்" எனவும்
திருவாய்மலர்ந்தருளியுள்ளார்.

இன்னும வேதத்திற்குப் பொருளருளிச்செய்த திருவிளையாடலில்:—
"ஆகையால் மறையுமொன்றே யருமறைப் பொருளுமொன்றே
சாகையாலனந்தமாகித் தழைத்தச் சாகையெல்லாம்
ஓகையா லிவனையேத்து முலகுத யாதிக்கிந்த
ஏகனு மேணயினான் மூன்று மூர்த்தியாயிருந்ததன்றே.
மலர்மக னுகிமூன்று வையமும் படைத்துமாலா
யலைவற நிறுத்திமுக்க ணுதியா யழித்தம் மூவர்
தலைவனுய்ப் பரமாகாச சரீரியாய் முதலீறின்றித்
தொலைவருஞ் சோதியாமிச் சுந்தர லிங்கந்தன்னில்
அருமறை நால் வேறுகையால் வருண மாச்சிர மங்களு நான்காந்
தருமம்யா காதி கருமமு மறையின் றகைமையிற் றோன்றின மறையுங்

கருமநூல் ஞான நூலென விரண்டாங் கருமநூ லிவனருச் சனைக்கு
வரும்வினை யுணர்த்து ஞானநூ லிவன்றன்வடிவிலாவடிவினையுணர்த்தும்."
என்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன.

பிரமகீதையில் "சின்மாத்திரமாயுள்ள" எ-ம் "எப்பொருள்களுந்தா ஞகி' எ-ம் 'பரமன் செயலறியாது' எ-ம் 'வேதமோதியதே' எ-ம் "வேதமாகமபுராணம்" எ-ம் "வேதநூலின் மிருதி" என்றும், சொல்லப்பட்டிருக்கின்றன. பகவற்கீதையில் பகவான் "அரியயனோடானுகி" என்பதனுலும், பாகவதத்தில் "அடைத்துழாய்ப் படலைமாலை" எ-ம் "தெளிக்கு நான்மறையும்" எ-ம் "பின்னபின்னமாய்" எ-ம் "சீர்பூத்த பரஞ்சுடராய்" எ-ம் "காதல்விட்டு" எ-ம் "வானம்போல் வடிவிலதாய்" எ-ம் அருளிச் செய்திருக்கின்ருர்.

திருவாய்மொழியில்;

"யானுந்தானு யொழிந்தானை யாது மெவர்க்கு முன்னேனைத்
தானுஞ் சிவனும் பிரமனுமாகப் பனைத்த தனிமுதலைத்
தேனும் பாலுங் கன்னலு மமுது மாகித் தித்தித்தென்
னூனிலுயிரி லுணர்வினி னின்ற வொன்றை யுணர்ந்தேனே"எ-ம்.

திருமந்திரத்தில்;

"ஒன்றதே பேரூர் வழியா றதற்குள
தென்றதே போலு மிருமுச் சமயங்க
ளன்றிது நீதி வென்றுரை யாந்தர்கள்
குன்று குரைத்தெழு நாயைமொத்தாரே. எ-ம்.

ஒத்த சமயங்க ளோராறு வைத்திடு
மத்த னொருவனு மென்ப தறிந்தில
ரத்த னொருவனு மென்ப தறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனு மாமே. எ-ம்.

ஆன சமய மதுவிது நன்றெனு
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
வானங் கடந்த வுருவது வாமே. எ-ம்.

ஆறு சமயமுங் கண்டிலர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளு மவனலன்
தேறு மின்றேறித் தெளிமின் றெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. எ-ம்.

முதலொன்று மியானை முதலுடன் வாலுஞ்
சிதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுட னந்தகர் வகைவகை பார்த்தே
யதுகூற லொக்கு மாறு சமயமே எ-ம்

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடு
முண்ணின்ற யோனிக ளெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணும்
அண்ணலு மவ்வண மாகி நின்றானே'' எ-ம்

வைராக்கிய சதகத்தில்,— ''புகலரும்'' எ-ம் '' சிவன்றிரி சயமன்றால்
ஒன்று நீயுனதிருப்பதேயதைத்தொடருபாயம்'' எ-ம்.

தாயுமானவர்,—''அங்கிங்கெனாதபடி...'' எ-ம்.

வள்ளலார்,—''எங்குஞ் சிவமொழிய...'' எ-ம்.

வாதவூரர் புராணத்தில்,—''என்றலுமே சிவமேது...'' எ-ம்.

வேதாந்த சூடாமணியில்,—''வடிவொடு பெயரால்...'' எ-ம்.

''சுருதியினுளேகமே,...'' எ-ம் சொல்லப்பட்டிருக்கின்றன.

இன்னும், வஸ்துவை, சுத்தப் பிரமமென்றும், காரணப் பிரமமென்றும், காரியப் பிரமமென்றும், ரூபமென்றும், அரூபமென்றும், ரூபாரூபமென்றும், நிர்க்குணமென்றும், சகுணமென்றும், நிட்களமென்றும், சகளமென்றும், சொல்லப்பட்டிருக்கின்றன.

திருமந்திரம்:—

பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவா யருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
யுருவா யுடனிருந் தொன்றா யன்றாமே.

தோத்திரங்களில் சில கவியில் ரூபத்தையும், சில கவியில் அரூபத்தையும், சில கவியில் ரூபாரூபத்தையும் பெரியோர்கள் துதித்திருக்கிறார்கள். வாக்குமனாதீத கோசரமாய் விளங்குகின்ற வஸ்துவை அரூபமென்றும் பிரமா விஷ்ணு ருத்திரன் முதலிய வடிவங்களை ரூபமென்றும், விராட் சொரூபம் அட்டமூர்த்த வடிங்களை ரூபாரூபமென்றும் சொல்லப்படும். சிவ லிங்கத்தை ரூபாரூபமென்றுஞ் சொல்லப்படுகின்றது.

வாதவூரர்புராணம்:— '' என்று கூடுமிப் பருவமென்றியம்பில் ''
''இத்த மூன்றினி லுருவனக்கரிய''

(அரூபத்துக்கு உதாரணம்.)

திருவாசகம்:— ''சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க''
''சிந்தனைக் கரிய சிவனே காண்க''

தேவாரம்:— ''அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியனிந்நிறத்தனிவ்வண்ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே''
''குறிகளு மடையாளமுங் கோயிலு
நெறிகளுமவர் நின்றதோர் நேர்மையு
மறிய வாயிர மாரணமோதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே''

திருக்கடைக்காப்பு:— "உலகிறந் தொண்பொருளான்..."
"அருமறையின் சிரத்தொளியாய்..."
தேவாரம்:— "அருந்தவர்கள் தொழுதேத்துமப்பன் றன்னை."
(ரூபாரூபத்துக் குதாரணம்.)
திருவாசகம்:— "நிலநீர் நெருப்புயிர்" "ஒரு நாமமோருருவம்"
"இன்றெனக்கருளி"
பெரியபுராணம்:— "ஆதியாய் நடுவுமாகி"
திருவிசைப்பா:— 'ஒளிவளர் விளக்கே' ஆகமநூல்—'சந்திரசேகரவுமா'
கைவல்யம்:—"நித்தியம் பூரணம்" "அசல நிரஞ்சனம்"

ஆசாரியரையடைந்து சாதுக்களைச் சேர்ந்து சுவாநுபவ நூலும், பக்தி மார்க்கநூலும், உணர்ந்து தெய்வலக்ஷணந் தெரிந்து தெய்வத்தை வழிபட வேண்டும். அப்படிக்கல்லாது வழிபடுவது கீழ்ப்பக்ஷமாகும். விசாரத்தினாலும், யோகத்தினாலும், தியானத்தினாலும், முக்கரண வழிபாட்டாலுந் தெய்வத்தைப் பூஜிக்கவேண்டும்.

(உதாரணம்)

வேதாந்தசூடாமணி:— "ஓங்காராதிகள்" "அன்றியளவுறு"
வாசிட்டம்:—"அறிவு சமபாவனை"

பிரமகீதை:—
"எல்லாமுஞ் சிவரூபமாகித் தோன்று மியாவனுக்குத் தன்னுடைத்தாய வனே மிக்க, சொல்லாலு மளப்பரியா னவன்றனிச்சை சுருதியினாற் றுணிந்துரைத்த சரிதையாலும், பல்லோரு மவனையருச் சனைசெய் தேத்தப் பரரூபந் தனக்கே நற்பூஜையாகும், கில்லாதவ் விச்சையினை நீங்கியுள்ள நிர்க்குணனு மிவனுகு நினையுங்காலே"

சிவனேயுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகருநெறி தானதுவாகும்
அவமே யிதனை யொழிந்துளதா மவைதா னிதனை யடைதற்குத்
தவமே முதலாம் சரிதைகளைச் சாற்றுகின்ற தன்மையவே.

ஆதா முடையீர் கேண்மின் அருமறைப் பொருளீதென்றே
யோதலா லுவமையில்லாப் பொருளிதி லையமுண்டேற்
றீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையி லிடுவே னென்று
னாதனு யுலகமெல்லாம் படைக்குநான் முகனுயுள்ளோன்

வைராக்கியசதகம்:—"நாமமாற்கருச் சனைமுதலிய"
சிவஞானபோதம்:—"பூசனையு மதுசகல"
அஞ்ஞவதைப்பரணி:—"பணியப்படுவொருள்ளிருக்கும்"
கந்தபுராணம்:—

அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாக்க்

கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங்கொண்டே
யொருதிரு முருகன்வந்தாங் குதித்தன னுலகமுய்ய.

சிவஞானசித்தியார்:—

" அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினு லறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகிற், பிறியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப் பிரபஞ்ச பேதமெல்லாந் தானுய்த்தோன்றி, நெறியாலே யவையெல்லா மல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனுயே."

தேவாரம்:—

"விரிவிலா வறிவினோர்கள் வேறொரு சமயஞ் செய்தே
யெரிவினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்
பரிவினாற் பெரியோரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவினல் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே"

திருமந்திரம்:—

"அறிவறியாமை யிரண்டு மகற்றிச்
செறியறி வாயெங்கு நின்ற சிவனைப்
பிறிவறியாத பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கோனறியாரே.

பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை
யெங்குமாய் நின்றாடு மேகம்பக் கூத்தனைக்
கங்குல் பகலினுங் காணாத கூத்தனை
யிங்கெ னிடமாக யான்கண்ட வாறே."

ஸ்ரீமத் கோவிலூர் ஆண்டவாது சுவானுபவத் திருவாக்கின்படியே ஷெ கோவிலூரில் வைதீக நூலுணர்ந்து தெய்வலக்ஷணந் தெரிந்து தெய்வ வழிபாடான திருப்பணி பூஜை உத்ஸவமுதலியவை யன்றுதொட்டு இன்று வரை நடந்துவருவன லோகப் பிரசித்தம். இவ்வாறு நடந்துவரும் வைதீக சைவவழிபாட்டின் பெருமையி னனுபவத்தை நான் சுருக்கிச்சொன்னேன். விரிப்பிற் பெருகும்.

சுபம்!

# ஸ்ரீ கோவிலூர்
# திருநெல்லையம்மன் மஹோத்ஸவ வாகனக் கவிகள்.

திருவாரு நாண்மலர் வானோர் பொழிந்திடச் சீர்பொருந்தன்
பொருவாத மெய்யடி யார்கண்டு போற்றிட வோங்கவியங்
குருமா மலர்ப்பதச் சாலிவா டீஸ்வரி கூர்கற்பகத்
தருவா கனத்துவந் தாடுதித் தாற்சுகந் தந்திடுமே.

மணியார் பணாடவிச் சேடனும் போற்றரு மாட்சியினாள்
கணியார் புயமேக நாதனுங் காணருங் காட்சியினா
ளெணிமா நிலத்தர சாட்சிசெய் சாலிவா டீஸ்வரித்தா
யணிகாம தேநுவின் வந்தாள் வழுத்துவீ ரன்பர்களே.

கரவாத வுள்ளமா ரன்பரைக் காக்குங் கருணையினா
ளாரனார் மகிழ்ந்துவெற் பாய்முளைத் தோங்கு மருணையினாள்
வரமா தரித்தருள் செய்கோவி லூர்ச்சாலி வாடீஸ்வரி
யுரமான சிம்மயா னத்துவந் தாள்பணிந் தோதுமினே.

மலையா ரிளங்கதி ரைப்போ லொளிர்மணி மாலையினா
ளுலவாத செந்தமிழ் நூலோற் கருள்செய்கா தோலையினாள்
குலமா மலர்ப்பதச் சாலிவா டீஸ்வரி கூரவிசை
பொலனாரும் வெள்ளி மலையானத் துற்றனள் போற்றுமினே.

பொருளாரு நான்மறை யாகமங் கூறிடும் பூரணிமெய்
யருளா லுயிரையெல் லாமளித் தாண்டரு ளாரணிபொன்
னுருவாரு நூபுரத் தாணெல்லை நாயகி யோதிமமாம்
பெருவா கனத்துவந் தாள்பணிந் தால்வரும் பேரின்பமே.

கோமேவு வானவர் பூமாரி பெய்து குதுகலிக்க
நாமேவு மெய்யடி யார்கண்டு போற்றிட நான்மறைகண்
மாமேவு மங்கு[illegible]முழுங் கச்சாலி வாடீஸ்வரி
பூமேவு மால்விடை [illegible] தாள்கண்டு போற்றுமினே.

பருகா திருந்தவஞ் செய்முனி வோர்களும் பார்க்கரியாள்
விரிவான [illegible] பாயொளிர் வித்தகிதேம்
மருவார் மலர்ப்பதத் தாணெல்லை யம்மன் மகிழ்ந்தருளப்
பொருவா லிபத்தின்மே லுற்றுவந் தாள்கண்டு போற்றுமினே.

கனிவாய்த் துதிக்குமெய்த் தொண்டரைப் பார்த்தருள் கண்ணுடையாள்
பனிமா மலரினிற் செந்தேனை யொத்திடும் பண்ணுடையா
டனிஞான முற்றிடுங் கோயிலூர் நெல்லையாந் தாய்பரிமே
லினிதாக வுற்றுவந் தாள்பணிந் தால்வரு மின்பங்களே.

☞ இவை வேம்பத்தூர் ஸ்ரீ சௌந்தர பாரதியா ரவர்களால் இயற்றப் பெற்றவை.



காரைக்குடி:—ஞானம்பிகா ப்ரின்டிங் வொர்க்ஸ். 3-3-300-17.